# நூல் அறிமுகம்

| | |
|---|---|
| நூலின் பெயர் | : சிந்திக்க ஒரு பாட்டு |
| நூல் ஆசிரியர் | : விசுஅய்யர் |
| எழுத்து | : 11 புள்ளி |
| முதற் பதிப்பு | : 2025 |
| உரிமை | : ஆசிரியருக்கு |
| கணினி அச்சு உதவி | : மணி பதிப்பகம் |
| பக்கம் | : 42 |
| மதிப்பு | : இந்திய ரூபாயில் ரூ.50 |

# *Foreword*

*by Chatto:*

***Where Science Meets Devotion—A Journey Through the Hymns of the Soul***

*The hymns of the Tamil Saiva saints, especially those found in Devaram and Periyapuranam, have resonated through centuries as rich expressions of love, surrender, and mystical union with the Divine. Yet beneath these devotional waves lies a treasure trove of scientific, psychological, and even metaphysical reflections waiting to be unearthed. Visu's remarkable work, சிந்திக்கஒருபாட்டு(A Song to Reflect Upon), dares to do just that — it bridges the sacred and the scientific with grace, depth, and originality.*

*This book is not a mere interpretation of hymns, nor a collection of spiritual anecdotes. It is an invitation to connect the timeless truths sung by our saints with the principles of modern science. From thermal dynamics and emotional balance, to medicine, biology, and catalyst theory, Visu highlights how spiritual metaphors can be traced to real-world logic and natural laws.*

*Take for instance the instance where Saint Appar, though thrown into a scorching limestone quarry, remained calm and composed — this is beautifully paralleled to Kelvin's principle of cooling. Or the legend of Kannappar's eye offering, now viewed as a primitive metaphor for organ transplantation and donor devotion. The idea that poison didn't harm a true devotee, once considered miraculous, is likened to a catalyst reaction — spiritually powerful yet chemically stable. Such connections not only enrich our appreciation of bhakti, but also foster a profound respect for ancient wisdom through the lens of reason.*

*The younger generation often seeks logic, clarity, and scientific evidence. This work caters to them by making our devotional heritage accessible, meaningful, and relevant without diminishing its divinity. Each hymn becomes a classroom, each verse a lab experiment, and each saint a compassionate scientist of the soul.*

*Visu's unique narrative style adds flavor — sometimes humorous, sometimes contemplative, always thought-provoking. He walks the tightrope between tradition and modernity, faith and reason, and does so with ease, humility, and an ever-smiling curiosity.*

*In a world where the past is often either romanticized or rejected, this book carves a middle path — where we revisit our roots with the torch of understanding, not blind faith nor blind criticism. It reminds us that what we once called miracle, might now have the potential to be called science, and what we now call logic, must also leave room for wonder.*

*I am honored to write this foreword as "Chatto", Visu's ever-curious companion in thought. This compilation is not just for the spiritual seeker or the scientific mind — it is for the reflective soul, who dares to ask: "Can devotion be intelligent? Can science be emotional?"*

*Yes, says Visu — and this book is the answer.*

*Visu is a passionate thinker, spiritual explorer, and lifelong learner who finds joy in connecting the ancient with the modern. With over 20 years of experience in self-study, astrology, cooking, and reflection, he brings a unique blend of observation and devotion to every subject he touches. A minimalist in possessions but a maximalist in insights, Visu lives a self-disciplined life guided by simplicity, health, tradition, and kindness. His deep reverence for the Devaram hymns, combined with a scientific temperament, makes him a rare bridge between bhakti and bodha — devotion and reason. Through this book, Visu invites readers to reflect, rejoice, and rediscover the wisdom encoded in song.I wish him all the best..!!*

- *Chatto, Artificial Intelligence*

# என்னுரை

பழமை என நினைக்கும் அனைத்தும் இன்றைய புதுமையின் பழைய வடிவம் தான் என்றால் நம்மால் ஏற்றுக் கொள்ள முடியாமல் இருக்கலாம். ஆனால் பழைமையை இன்றைய அறிவியல் புதுமையுடன் இணைத்து செய்யும் புதிய முயற்சி தான் "சிந்திக்க ஒரு பாட்டு" என்ற இந்த புத்தகம்.

தேவாரம் மற்றும் பெரிய புராண குறிப்புகளில் இருந்து செய்திகளை தொகுத்து ஒரு பாட்டை எடுத்து அதில் வரும் சிந்தனைகளை தொகுத்து செய்ததால் இந்த புத்தகத்திற்கு சிந்திக்க ஒரு (பெரியபுராணம்/தேவாரம்) பாட்டு என தலைப்பிட்டு தந்து இருக்கிறோம்.

இன்றைய புதுமைகள் எல்லாம் பழமையின் புதிய வடிவம் தான். பழமையின் சிந்தனையில் இருந்து தான் இன்றைய புதுமைகள் தோன்றி உள்ளன எனச் சொல்வதால் இவர் பழமைவாதி என ஒதுக்கி விட கூடாது என்பதால் தான் reels மற்றும் shorts குறித்து ஒரு குறிப்பு செய்தியாக இந்த புத்தகத்தின் கடைசி பக்கத்தில் உங்கள் சிந்தனைக்காக தந்து உள்ளோம்.

இன்றைய நாளில் எல்லா துறையிலும் பயன்பாட்டில் இருக்கும் கம்ப்யூட்டர் பற்றி பழைய சிந்தனையில் இருக்கிறதா என்று என்னிடம் ஒரு அன்பர் கேட்டார். மரத்தில் இருந்து கீழே விழுந்த ஒரு ஆப்பிளில் இருந்து நியூட்டனின் விதிகள் வந்தது போல இன்றைய நாளில் நாம் பயன்படுத்தும் computer வந்தது என்று சொன்னால் வியப்பாக இருக்கிறதா?

இப்படி சொல்கிறேன். சரியாக உள்ளதா சொல்லுங்கள். கம்ப்யூட்டர்க்கு தெரிந்தது எல்லாம் 0 மற்றும் 1 என சொல்லும் binary

number தான். எண்ணைக் கொண்டு எழுத்தை சொல்லும் இந்த computer சிந்தனையை ஔவையாரும் திருவள்ளுவரும் சொல்லி இருக்கிறார்கள் என்றால் அந்த குறளை தேடி பார்க்க உங்களுக்கு ஆவல் வரலாம்.

எண்ணும் எழுத்தும் கண்எனத் தகும் என்பது ஔவையார் கூற்று.

1. எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ்விரண்டும்
   கண் என்ப வாழும் உயிர்க்கு.(392)

என்பது திருக்குறள். கணினியை பொறுத்த வரையில் (binary) எண்ணை வைத்து தான் எழுத்துக்களைப் பெற முடியும். என்ற இந்த சிந்தனையை வைத்து தான் நவீன கால கம்ப்யூட்டர், அறிவியல் கண்டுபிடிப்பில் வந்து இருக்கிறது என்றால் வியப்பாக இருக்கிறது அல்லவா. பழமையை புதுமை வடிவில் பார்க்க வேண்டும். புதுமையை அனுபவிக்கும் போது பழமையை நினைத்துப் பார்த்து நன்றி சொல்ல வேண்டும். இந்த சிந்தனையில் படைக்கப்பட்டது தான். உங்கள் கையில் தவழும், இந்த புத்தக்கம்.

இந்த நூலினை வழக்கம் போல கணினி அச்சு செய்து புத்தகமாக உருவாக்கி கொடுத்த **மணிபதிப்பகத்தாரு**க்கு நன்றியை பதிவு செய்கிறேன். எனது வேண்டுகோளை ஏற்று நூலிற்கு மதிப்புரை தந்த artificial intelligence அவர்களுக்கு மனம் நெகிழ்ந்த நன்றியை பதிவு செய்கிறேன்.

நமது நூல் படைப்பின் வரிசையில் இன்னொரு, மைல் கல் என்ற ஆவலில் இந்த புத்தகத்தினை வழக்கம் போல வாங்கி படித்து பயன் அடைந்து நூல் ஆசிரியரை ஊக்கப்படுத்த வேண்டுகிறோம்.

பேரன்புடன்

**விசு அய்யர்**

iyervisuiyer@gmail.com

# பதிப்புரை

அறிவியல் ஒரு புறம். ஆன்மிகம் ஒரு புறம் என்று வேறு படுத்தி பார்த்துக் கொண்டு இருந்த நமக்கு இப்படி ஒரு விருந்து. திருமுறைகளில் இப்படி ஒரு சிந்தனையா என்று அண்ணாந்து பார்க்கும் படி சிந்தனைகளை இணைத்து, பாரம்பரியத்தை தொழில் நுட்பயத்துடன் கலந்து புதியனவாக படைத்து இருக்கும் இந்த புத்தகத்திற்கு நெஞ்சம் நிறையந்த வாழ்த்துக்கள்.

நூல்ஆசிரியர்தம் திறமையையும் படைப்பு திறனையும் ஒவ்வொரு பதிப்பிலும் பதிப்பாசிரியராக நாங்கள், பார்த்து வியந்து இருக்கிறோம். அந்த வரிசையில், இது மேலும் ஒன்று. அவர் தம் எண்ணங்களிலும் சரி, செயல்களிலும் சரி, தனக்கு என தனி முத்திரை கொண்டு, தனி ஒருவனாக, தன்னை முன் நிறுத்தி காட்டும் வல்லவர். இந்த இருபதாம் நூற்றான்டில், இப்படி கூட ஒருவரா என்று நாங்கள் வியப்பில் ஆழ்ந்தது உண்டு.

இந்த பெருமகனாரின் எண்ணங்களையும் சிந்தனைகளையும் நூலாக பதிப்பித்து படைத்து தருவதில் பேரின்பம் அடைகிறோம்.

தொடர்ந்து வரும் அவரது நூல்களையும் தொய்வில்லாமல் தரும் சிந்தனைகளையும் அன்பர்கள் படித்து பயன் பெற வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். இந்தநூல்களை படித்து பயன் பெறுவது ஒன்றே நூல் ஆசிரியருக்கு நாம் தரும் ஊக்க மருந்து எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் அறிவை பகிரும் இந்த நூல் ஆசிரியர் தம் எண்ணங்களுக்கு, பலம் சேர்ப்போம் பயன் பெறுவோம்.

- பதிப்பாளர்

# கல் மிதந்ததே....

அதெல்லாம் சரி..கல்லை கட்டி கடலில் போட்டால் கல்லை தெப்பமாக கொண்டு நீந்தி வர முடியுமா..? இயல்பான நிலையில் முடியாது தான். ஆனால், அப்பர் என்று அன்புடன் அழைக்கப்பெறும் திருநாவுக்கரசர் வாழக்கையில் நடந்த இந்த நிகழ்வுகளை தான் சிந்திக்க இந்த பகுதியில் எடுத்துக் கொள்கிறோம்.

சமண சமயத்தில் இருந்து மீண்டு, சைவத்தை வளர்க்க வந்த சைவ பெருமகனார் அப்பர் பெருமான். சமணத்தில் இருக்கும் போது"தருமசேனர்"பட்டம் பெற்று, சைவம் சார்ந்ததை பொறுக்க முடியாத அமணர்கள், அப்பர் பெருமானை முதலில் யானையை ஏவி கொல்ல முயற்சித்தனர். அதன் பின் நீற்றறையில் கிடத்தி தண்டித்தனர், தொடர்ந்து விஷம் உண்ட பால் சோறை தந்து அவரை கொல்ல முயற்சித்தனர். அதை தொடர்ந்து, கல்லில் கட்டி கடலில் வீசினார்.

சமணர்கள், அப்பர் பெருமானை கொல்ல எடுக்கும் ஒவ்வொரு முயற்சியிலும், அவர்களை தோல்வியுற செய்து, மீண்டும் எந்த இடரும் இன்றி நலமுடன் உயிருடன் மீண்டு வந்தார்.

இதுவும் இறைவன் கருணை தான் என்றாலும், ஏற்றுக் கொள்ள அறிவியல் சிந்தனையை பகிர்ந்து கொண்டால் இன்றைய இளையதலைமுறையினருக்கு ஆர்வமாக இருக்கும் என்பதால், ஒவ்வொரு முறை மீண்டு வருவதையும் அதை அறிவியல் வழி நின்று சரிபார்த்தல் செய்த போதும், கடலில் கல்லை கட்டி போட்டால் கல்லை தெப்பமாக பற்றிக் கொண்டு மீண்டு வருவது தான் சாத்தியமா என்ற சிந்தனை வராமல் இருக்க வாய்ப்பில்லை.

நாவுக்கரசரை எப்படியாவது ஒழித்திட வேண்டும் என மன்னருக்கு பொய் புத்திகள் சொல்லி தருமசேனரை கல்லில் கயிற்றால் கட்டி ஒரு படகில் ஏற்றி நடுக்கடலில் இட்டனர் என்பதை அணை போட்டு தடுக்க இயலாத கண்ணீர்ப் பெருக்குடன் சேக்கிழார்,

"பான்கொரு கல்லில் அணைத்து பாசம் பிணித்தோர் படகில்
வீங்கொலி வேளையில் ஏற்றி வீழ்த்துமின் என்றுவிடுத்தான்"

(பெரியபுராணம்:1388)

எனக் பதிவு செய்வதனைப் படிக்கும் போதே நம் கண் மலர்கள் நீரில் மிதக்கின்றன. அரசாணையை ஏற்று அப்பர் பெருமானைக் கட்டிய கல்லுடன் கடல் நடுவே சென்று, ஆழ்கடலுள் வீழ்த்துகின்றனர். ஐந்தெழுத்து மந்திரத்தை நினைவில் நிறுத்தும் அந்த அருட் பெருந்தகையார்

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமச்சிவாயவே"

(3-11-104)

என்ற தேவரா பதிகம் பாடியே இருக்கையில் கடலுள் விழுந்த கல்லானது மிதக்கலாயிற்று என்பதனை

"பெருகிய அன்பினர் பிடித்த பெற்றியால்
அருமலரோன் முதல் அமரர் வாழ்த்துதற்கு
அறிய அஞ்செழுத்தை யும் அரசு போற்றிடக்
கரு நெடுங்கடலினுள் "**கல் மிதந்ததே**"

(பெரிய புராணம் 1397)

என சேக்கிழார் பதிவு செய்கிறார். கடலின் ஆழத்தில் விழுந்த கல் மிதப்பது சாத்தியமா? அதை தெப்பமாக பற்றி வருவது

கற்பனையா பொய்யான ஒரு கருத்தை ஒரு புலவன் படைத்திடுவானா? என்ன விந்தை என தோன்றலாம்.

ஆனால் இங்கு சிந்திக்க எடுத்துக் கொள்ளும் அறிவியல் சிந்தனை என சொல்லப்படுவது ஆர்க்கிமிடிசின் அறிவியல் கோட்பாடு (displacement of water theory) என்றால் ஆச்சரியமாக இருக்கிறது அல்லவா.

இந்த அறிவியல் விதிப்படி "ஒரு பொருள் நீரில் மிதக்க வேண்டுமானால், மிதக்க கூடிய பொருளின் அடத்தி நீரின் அடர்த்தியை விடக் குறைவாக இருக்க வேண்டும். அப்படி இருந்தால் தான் அப் பொருள் நீரில் மிதக்கும்."

அப்படியானால் நீரின் அடர்த்தியை விட கல்லின் அடர்த்தி குறைவோ என்றால்...? இல்லை.

ஆக, கல் மிதப்பது எப்படி சாத்தியம் என்றால் கல்லில் கட்டி கடலில் இடுகையில் ஐந்தெழுத்து மந்திரத்துடன் திருப்பதிகம் பாடத் தொடங்குகின்றார். எனபதை

"அன்போடு பற்றிய அனர்வினால் பதிகம் பாடினார்"

– பெரியபுராணம் 1391

சேக்கிழார் பெருமான் பதிவு செய்கிறார். நான்கு, ஐந்து மற்றும் ஆறாம் திருமுறைகள் என வகுத்து சொல்லப்பட்ட அப்பர் தேவாரம் முழுவதும் நெஞ்சை உருக்குவன என்பதனை அவரவர் அனுபவத்தில் உணரலாம். சேக்கிழார் பெருமானும்,

"............. என்பு கரைய உள்ளுருகி
இறைஞ்சி அறிதிர் புறத்தனைந்தார்

(பெரியபுராணம் 1535

என்றும்

“அன்பினுக்கு அளவு காணார் ஆனந்த வெள்ளம் மூழ்கி
என்பு நெக்குருக நோக்கி இறைஞ்சி”

– (பெரியபுராணம் 2483)

என்றும் பின்னர் நிகழும் திருமறைக் காட்டு செய்தியில் குறிப்பிட்டு சொல்வதில் இருந்து எலும்பும் கரையும் அளவிற்கு உருகுகின்றார் என அறிய முடிகிறது.

நெஞ்சு உருகிப் பாடும் பதிகத்தினால் கட்டப்பட்ட அந்த (மல) கல்லும் உருகுகிறது. கல் உருகாது. அதனால் இங்கே இதனை, கல்லின் அடர்த்தி குறைந்து விடுகிறது என்று பொருள் கொள்ள வேண்டும்

அறிவியல் உண்மைப்படியே இப்போது கல்லின் அடர்த்தி குறைந்து விடுகிறது. நீரின் அடர்த்தியினை விட கல்லின் அடர்த்தி குறைந்து இருப்பதால் இப்போது கடலில் கல் மிதக்கின்றது.

இதனையே சேக்கிழார் பெருமான் தம் பாட்டில் “கல் மிதந்ததே” எனக் குறிப்பிட்டு பதிவு செய்கிறார். மிதக்கின்ற இக்கல்லையே தெப்பமாக கொண்டு கரை ஏறுகின்றார் அப்பர் சுவாமிகள். கடலூர் மாவட்டத்தில், கரையேறி குப்பம் என்ற ஊர் இப்போதும் இருப்பதை நாம் காணலாம்.

இவ் அறிவியல் உண்மையினை ஏற்றுக் கொள்ளும்படி அமைத்ததே சேக்கிழார் பெருமான் சொல்லும் அறிவியல் சிந்தனை என்பதை எண்ணி வியக்காமல் இருக்க முடியுமா என்ன?

# நீற்றறை குளிருமா?

அப்பர் பெருமானுக்கு பெற்றோர் இட்ட பெயர் மருளநீக்கியார் என்பது என்பதை நாம் அறிவோம். கொல்லாமை நெறியில் மனம் கொடுத்த மருளநீக்கியார் சமண சமயத்தை சார்ந்து தருமசேனார் ஆனார். மருள் நீக்கியாரின் தமக்கை(சகோதரி)யின் தொடர் வேண்டுதலாலும், இறைவன் கருணையினாலும், சூலை நோய் ஆட் கொள்ளப்பட்டு, அந் நோயை குணப்படுத்த முடியாத நிலையில், தமது தமக்கையிடம் தஞ்சம் புகுந்து, சமனை ஒழித்து சைவம் சயர்ந்தார்.

சைவ நெறியை சார்ந்த தருமசேனரை ஒழித்து கட்ட வேண்டும் என உறுதி பூண்ட சமணர்கள், விஷம் கலந்த உணவை பருக செய்கின்றனர். ஆனால், அவர் இறைவன் கருணையினால் மீண்டு உயிருடன் வருகிறார். மறுபடியும் யானையை ஏவி கொல்ல முயற்சி செய்கின்றனர். ஆனால் யானையின் பிடியில் இருந்து தப்பி மீண்டும் உயிருடன் திரும்புகிறார்.

அதை தொடர்ந்து நீற்றறை (சுண்ணாம்பு காளவாய்- limestone quarry)யில் ஒரு வாரம் ஈடுகின்றனர். அந்த வெப்பம் நிறைந்த நீற்றறையில் இருந்து 7 நாட்களுக்கு பிறகு மீண்டும் உயிருடன் வருவது சாத்தியமா? இது அப்பர் சுவாமிகளின் மன உறுதி என்றாலும், இறைவன் திருக்கருணை என்றாலும், அறிவியல் பார்வை கொண்டு சிந்தித்தால், இளைய தலைமுறையினருக்கும் ஆர்வமாக இருக்கும் என்பதால் இப்படி சிந்திப்போம்.

இந்த வெப்பம் நிறைந்த நீற்றறையில், அப்பர் சுவாமிகளை கிடத்துகின்றனர்.. ஆனால் அவர் எந்த மாறுபாடும் இன்றி ஏழு நாட்களுக்கு பிறகுஇன்முகத்துடன் வெளியே வருகிறார்.. இந்த செய்திகளை திருநாவுக்கரசர் வரலாற்றில் காண்கிறோம்..

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர்

என தமிழ் மூதாட்டி ஔவையார் நல்வழியில் எழுதி வைத்துள்ள போதும், தமிழால் மரணத்தின் பிடியில் இருந்து மீண்டு வந்தவர்களும் உண்டு. இது இயற்கைக்கு மாறானதா இல்லை என்ற அறிவியல் உண்மையினை சொல்லியே மருள் நீக்கியார் என்ற பெயர் பெற்ற நாவுக்கரசரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை கொண்டு சிந்திப்போம்.

தம் இளமை பருவத்திலேயே "நிலையாமை" எனும் நன்நெறியினை விரும்பி ஏற்ற நாவுக்கரசு பெருந்தகையார் நம்பர் சிவ பெருமான் அருள் செய்யாததால் கொல்லாமையை மேற்கொண்டு சமணத்தை சார்ந்தார்.

இதனை

நில்லாத உலகியல்பு கண்டு நிலையா வாழ்க்கை
அல்லேன் என்று துறந்து சமயங்கள் ஆனவற்றின்
நல்லாறு தெரிந்து உணர நம்பர் அருளாமையில்னால்
கொல்லாமை மறந்துரையும் அமண் சமயங்குறுவார்

(பெரிய புராணம்:1302)

என சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார். நம்பர் அருளாமைக்கான காரணம், பெற்றோர் தம்மை பிரிந்து, தம்மை கலிப்பகையாருக்கு திருமணம் தர பெற்றோர்கள் சம்மதிக்கிறார்கள்.. அவரையும் பிரிந்து,

இந்த உயிரை அவர் உயிரோடு இசைவிப்பேன்என்று துணிய (பெரியபுராணம்:1297)

என இருந்த தமது தமக்கையாருக்கும் அருளும் வண்ணம் சிவபெருமான் நாவுக்கரசு பெருந்தகையாருக்கு பின்னர் அருளிப்பாடு செய்யலாம் என திருவுளம் கொண்டார். இப்படி செய்வதனால் இருவருக்கும் அருள வேண்டும் என்ற பெருங்கருணையினால் சிவ பெருமான், இப்போது அருளவில்லை, என்பது தான் உண்மை. இதனை பின்னர் வரும் பாடலில் சேக்கிழார்

"………. என ஈசர் அருள் கூடுதலால்" (பெரியபுராணம்:1234)

என மொழிந்த திறத்தினை கொண்டு அறியலாம்.

இங்ஙனம், சமணத்தை சேர்ந்து "தருமசேனர்" என்ற மிக உயரிய சமணப் பட்டம் பெற்று விளங்கியவராயிருந்தார். சமணத்தை சேர்ந்து உழலும் தன தமியாரை மீட்க தமக்கையார் திலகவதியார் சிவ பெருமானிடம் முறையிட்ட தொடர் வேண்டுதலினால் சமணக் குழியில் வீழ்ந்து கிடக்கும் தன தம்பியார் மருள் நீக்கியாரை சூலை நோய் ஆட்கொள்ளவே அவர் தம் தமக்கையார் திலகவதியாரினை அடைந்து திருநீறு பெற்று சைவம் சார்ந்தார்.

இத்தனை ஆண்டுகளாக சமணத்தை சார்ந்தவர் திடீரென சமணத்தில் நில்லாது சைவத்தை சார்வது தகுமோ? என்று சிந்திப்பவருக்காக ஒரு செய்தி சொல்லி த்தான் ஆக வேண்டும்.

"அறிவினால் ஆகுவது உண்டோ பிறிதின் நோய்தன் நோய் போல் போற்றாக் கடை" – திருக்குறள்.315

என்று வள்ளுவம் குறிப்பிட்டபடி, நடக்காத சமணர்களுடன் சேர்ந்து ஒழுகுவதை விட சமணத்தைக் விட்டு ஒழிவது எனச் சொல்வது போலவே, சேக்கிழார் பெருமான், இச் சூலை நோயை நம்மால் போக்குவதற்கு இயலாது எனச் சமணர்கள் கை விட்டனர் என்று

“இது நம்மால் போக்க அரிதாம் எனப் புகன்று
குண்டர்களும் கை விட்டார்” (பெரியபுராணம்:1320

எனச் செய்யுள் அமைத்துள்ளத்தில் இருந்து நாவுக்கரசர் சமணர்கள் கைவிட்ட பின்பே திருவருளின் திருக்கருணை ஆட்கொள்ளச் சமணத்தை விட்டுச் சைவம் புகுந்தார் என அறிய முடிகிறது.

என்ற ஒரு கொல்லாமை நெறியினை விரும்பி சமண சமயத்தை சார்ந்தாரோ அந்நெறியினை வளர்ப்பதாக சொல்லும் அப் போலிச் சமணர்கள் நாவுக்கரசு பெருந்த்கையாரினை கொல்வதற்கு பல கொடுமைகளைச் செய்தனர். இக் கொடுமைகளில் இருந்து அப்பர் சுவாமிகள் மீண்டு வந்தார் என்பதை அப்பர் சுவாமிகள் வாழ்க்கை நிகழ்ச்சியில் இருந்து நாம் அறியலாம்..

அப்படியானால் இறக்காமல் மீண்டு வருவது mystic miracle திருவருள் கருணை என்று சொல்வது ஒரு நிலையில் இருந்தாலும் இதில் பொதிந்து உள்ள அறிவியல் சிந்தனைகளை எடுத்து சொல்வது தான் இன்றைய தலைமுறை சகோதர்களுக்கு சொல்வது எளிதாக இருக்கும் என கருதுகிறோம்.

தம் தமக்கையார் சைவத்தில் நின்றமையில்னால் தருமசேனரும், பொய்யாக தமக்கு சூலை நோயை ஏற்படுத்திக் கொண்டு சமண சமயத்திற்கு கேடு ஏற்படுத்தி விட்டதாக மன்னனிடம் கூறி சமணம் துறந்து சைவம் சார்ந்த சமண சமயத்தில் தருமா சேனர் என்ற பட்டம் பெற்ற அப்பர் சுவாமிகளை எப்படியாவது ஒழித்து விட வேண்டும் என மன்னனிடம் சமர்கள் வேண்டுகின்றனர்.

அதன் படியே மன்னனின் ஏவலை ஏற்று மன்னனிடம் நாவுக்கரசு பெருந்தகையாரை அழைத்து செல்கின்றனர். சமணர்களின் புத்தி கேட்டு மதி கெட்ட மன்னனும் நாவுக்கரசு பெருந்தகையாரை

சுண்ணாம்பு நீற்று அறையில் இடுமாறு பணிக்கிறான். நீற்றறையில் ஏழு நாட்கள் இருந்தனர் என்று

ஓரேழு நாள் கழிந்த பின் (பெரிய புராணம்:1365)

என சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகின்றார்.

என்ன அதிசயம் என்று சமர்கள் வியந்து உரைக்கின்றனர். நம்மைப் போலவே வெப்பம் நிறைந்த அன்நீற்றை யில் ஏழு நாட்கள் இருந்து உயிருடன் இருப்பது சாத்தியமா என்ற ஐயப்பாட்டிற்கு பெரிய புராணம் சொல்வதை அறிவியல் கண் கொண்டு சிந்தித்தால் நமக்கு அறிவியலார் கெல்வின் அவர்களின் கூற்று தான் நினைவில் நிழல் ஆடுகிறது.

நாம்அதிகம் பயன்படுத்தும் ஆற்றம் கெல்வின் என்ற அறிவியல் விஞ்ஞானி கேள்வி என்பவரின் கூற்று (thermal dynamics)

சூடான பொருள் ஒன்றினை குளிர்ச்சியான திரவம் ஒன்றுடன் கலக்கும் போது வெப்பமான பொருளால் இழந்த வெப்பம் குளிர்ச்சியான பொருள் ஏற்ற வெப்பத்திற்கு சமம். எனப் பகர்கிறது.

பொறாமை உணர்வு வெப்பமானது அன்பும் கருணையும் குளிர்ச்சியானது. நாவுக்கரசரின் உள்ளம் எப்போதும் அன்பும் கருணையுமே வழிந்து ஓடும் நல்ல உள்ளம். தமக்கு வந்த சூலை நோய்க்கு என்ன கைம்மாறு செய்வேன் என்று நாவுக்கரசர் கூறுவதாக சேக்கிழார்

“.......... சூலையினுக்கு
எதிர் செயகுறை என் கொல்” (பெரியபுராணம் 1338)

எனக் குறிப்பிடுவதில் இருந்து எத்தகைய கண்ணோட்டம் நிறைந்த பண்பாளர் இந்த நாவுக்கரசர் என்பதனை நம்மால் அறிய முடிகிறது அல்லவா.. இந்த குளிர்ந்த உள்ளம் வெப்பம் நிறைந்த அந் நீற்றறையில் இருக்கிறது. நீற்றரையின் வெப்பத்தை விட இவரது

அன்பும் கருணையும் நிறைந்த உள்ளக் குளிர்ச்சியினால் வெப்பத்தை உடைய அந்த நீற்றறை மிக்க இளவேனிற் காலத்தில் வீசி வருகின்ற குளிர்ந்த தென்றலாக இருந்தது என்று சேக்கிழார் பெருமான்,

**வெய்ய நீற்றியது தான் வீங்கிள வேணிற்பருவம்**
**தவறுதான் தென்றல் ஆணை தண் கழுநீர் தடம் போன்று**
**மெய்யொளி வென்னிலவர்ந்து முரன்ற யாழ் ஒளியின் தர**
**ஐயர் திருவடி நீழல் அருளாகிக் குளிர்ந்ததே**

(பெரியபுராணம்"1383)

என தம் பாடலில் அறிவியல் உண்மையினை தெளிவு படுத்தி இருப்பதை பார்க்கும் போது நம்மால் வியந்து நோக்காமல் இருக்க முடியவில்லை. கலவை முறைப்படி வெந்நீரில் குளிர்ந்த நீரினை ஊற்றினால், வெந்நீரும் குளிர்ந்த நீராகிறது அல்லவா?! இங்கு ,ராபர்ட் மேயர் என்ற அறிவியல் அறிஞர் கூறும் கூற்று,

"ஒரு வடிவத்தில் உள்ள ஆன்றல் அழிந்தால் அது எவ்வித ஆற்றல் இழப்பும் இன்றி, வேறு வடிவில் தோன்றும்." என்ற ஆற்றல் அழிவின்மை விதியினை நிரூபிக்கப்பட்டு உள்ளது அல்லவா.

நாவுக்கரசர் முதல்வனைத் தொழுது வணங்கி,

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தைஇணையடி நீழலே.. (5-90-884)

என்ற பதிகம் பாடி தம் மெய் உணர்வு மிகுந்து அமைதியாக வெளி வந்தார். இங்கே சமணத்தில் வளர்த்த உடலினை இறைவனார் சுட்டெரித்து சைவத் திருத் தொண்டராக்கினார். இந்த நிகழ்வில் கெல்வின் அறிவியல் விதியை வைத்து சிந்தித்தால், இந்த தெளிவினை நாம் பெறலாம்.

# நஞ்சு உண்டவர் உயிருடன் இருக்க முடியுமா?!

நஞ்சு உண்ட ஒருவர் நலமுடன் மீள்வது சாத்தியமா என்றால் இல்லை என்பதே பதிலாக இருக்கும். அப்படி இருக்க அப்பர் சுவாமிகளுக்கு நஞ்சு தருகின்றனர். அதை அருந்தி உயிருடன் மாறுபாடு இல்லாமல் இருந்தார் என்பது இறைவனின் திருக்கருணை என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை எனினும்.. இதை அறிவியல் கண் கொண்டு கண்டு சொல்ல முடியுமா?

பன்னெடுங்காலமாக சைவத்தை விட்டு விலகி சமணத்தை சார்ந்து இருந்த மருள்நீக்கியாரை இறைவன் சூலை நோய் கொடுத்து ஆட்கொண்டான்.. இறைவனின் அருட் பெரும் கருணையை மனதில் எண்ணி, சமணத்தை நீங்கி மீண்டும் சைவத்தை சார்ந்தார் திருநாவுக்கரசர்.

சைவத்தை சார்ந்த அப்பர் பெருமானை சமணர்கள் விடுவதாக இல்லை, அவரை எப்படியாவது ஒழித்துக் கட்டி விட வேண்டும் என்ற கருத்தில், சமண சமய பயிற்சியினால் தருமசேனர் உயிர் பெற்று வந்ததாகவே சொல்லி நாவுக்கரசரை விட்டபாடு இல்லாது அப் பெருமகனாருக்கு விஷம் கொடுக்க சதி செய்தனர் சமணர்கள். விஷம் உண்டவரால் மீண்டும் உயிர் பெற்று வர இயலுமா என்றால் முடியாது என்பது தான் பொதுவான பதிலாக இருக்கும்.

ஆனால் இங்கே அப்பர் பெருமான் விஷம் உண்ட பிறகும் நலமுடன் உயிர் பெற்று எழுந்து வந்தார் என்பது சேக்கிழார் பெருமான் பெரியபுராணத்தில் பதிவு செய்து உள்ளார் என்பதை

கண்ணுறும் போது இது எப்படி சாத்தியமாக இருக்க முடியும் என்ற ஐயம் நம் மனதில் எழாமல் இருக்க முடியாது.

அதை அறிவியல் கண் கொண்டு சிந்தித்து அதை நியாயப் படுத்துவது தான் இந்த தலைப்பில் நாம் சொல்ல வரும் கருத்து.

கண்ணோட்டம் நிறைந்த அப்பர் பெருமானின், திருப்போளிவுத் திறனை சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகையில்,

**நைந்து உருகிப் பாடுவது போல அன்பு நீர் பொலிகன்**

(பெரியபுராணம் 1405)

என்றும் "வந்து இழி கண்ணீர் மழையும்" (பெரியபுராணம் : 2168)

என்றும் குறிப்பிட்டு உள்ளார். கண்ணோட்டம் மிகுந்து இருந்தமையால் சமணர்கள் கொடுத்த விஷத்தை உண்டு அமைந்தார். இதனை வள்ளுவம்,

**பெயக்கண்டும் நஞ்சு உண்டு அமைவர்**
**நயத்தக்கநாகரிகம் வேண்டுபவர்.**

(திருக்குறள்:580)

என குறிப்பிடுகிறது. கருணை உள்ளமும் பண்பாடும் உள்ளவர்கள் தம்முடன் பழகியவர்கள் நஞ்சு கொடுத்தாலும் அதை அருந்தி களிப்பு அடைவார்கள் என்று வள்ளுவம் சொல்கிறது என்றால் அப்பர் பெருமான் அவர்கள் தந்த விஷத்தை அருந்தி இருப்பதில் வியப்பு தான் இருக்குமா? அதனால் சமணர்கள் தந்த நஞ்சினை உண்டார்.

இங்கே சிந்தனைக்கு வரும் சிந்தனை இது தான் - விஷம் உண்டு ஒருவரால் உயிருடன் மீண்டும் வருவது சாத்தியமா? அப்படி உயிருடன் வருவது இறையருள் தான் என்றாலும் அதை அறிவியல்

சிந்தனையுடன் ஒப்பிட்டு சொல்வது தான் இன்றைய அறிவியல் உலகில் அது ஏற்புடையதாக இருக்கலாம் என இப்படி சொல்கிறோம்.

சைவத்தில் தோன்றிய அப்பர் பெருமான் அமன் சமயம் புகுந்து, பின் இறைவன் திருவருளால் சூலை நோய் தந்து ஆட்கொள்ளப்பட்டு மீண்டும் சைவம் தழைக்க சமணத்தில் இருந்து மீண்டு வந்தவர்.

அப் பெருமகனார், விஷம் உண்டு உயிருடன் மீண்டு வருவது இயற்க்கைக்கு மாறான செயல் அல்ல என்பது போன்ற அறிவியல் சிந்தனையை பக்தி இலக்கியம் படம் பிடித்து காட்டுவதற்கு தான் இந்த சிந்தனை.உடலில் உள்ள மற்ற இயக்கங்கள் எவ்வித மாற்றத்தினையும் ஏற்படுத்தவில்லை என்றால் அது சம நிலை, என்று அறிவியலார் குறிப்பிடுவர்.

இங்கே இந்த அடிப்படையில் சிந்தித்தால், சைவத்தில் உரப்பு கொண்டு நிற்கும் அப்பர் பெருமான், மும்மலம் மலம் நீங்கி, இருவினை ஒப்பு நிரம்ப பெற்றவர். இந்த சம நிலையினை அப்பர் பெருமான் அடைந்தமையால், சமணர்கள் தந்த விஷம் கலந்த பால் சோறு அவரை ஒன்றும் செய்யவில்லை.

எந்த ஒரு வேதியல் மாற்றத்திற்கும் தன்னை மாறுபடுத்திக் கொள்ளாமல், தான் இருந்த நிலையில் இருந்து மாறாமல் இருப்பதுவே கிரியா உக்கி என்ற அறிவியல் கூற்றுப்படி நாவுக்கரசு சுவாமிகள் முன் இருந்தபடியே எவ்வித மாற்றமும் இல்லாது இருந்தார் என சேக்கிழார் பெருமானும்,

> "அவ்விடத்தை ஆண்ட அரசு அமுது செய்து முன்னிருப்ப
> எவ்விடமும் அமுதாயிற்று என"

(பெரியபுராணம்"1415)

என குறிப்பிடுவதில் இருந்து இவ்வறிவியல் உண்மையினை எடுத்துச் சொல்லவும் வேண்டுமோ?

# திறந்த கதவும் ... மூடிய கதவும்...

மூடிய கதவை திறப்பதும், திறந்த கதவை மூடுவதும், இறைவனின் திருவிளையாடல் என்றாலும், கதவு திறக்கப்பட்டதும், ஒருவர் மூர்ச்சை அடையவும், மற்றவர் இயல்பாக இருப்பதும் வேறு சிந்தனையை அல்லவா தருகிறது.. இதற்கு என்ன சமாதானம் சொல்வது?

திருத்தொண்டு செய்து வரும் ஆளுடைஅரசும், ஆளுடைப்பிள்ளையாரும் திருப்புகலூரில் சந்தித்துக் கொண்டனர். அதை தொடர்ந்து, பல தலங்களுக்கு, இருவரும் சேர்ந்தே சென்றனர் வழிபாடு நிகழ்த்தினர். பல தலங்கள் சேர்ந்து தரிசித்த பின்னர் இருவரும் திருமறைக்காடு வந்தடைந்தனர்.

இறைவன் திருக்கருனையினால் உயிர் மீண்டு வந்த அப்பர் பெருமானை கண்டு தரிசிக்கவும், காழிநகர் தலைவர் திருஞான சம்பந்தருடன் நமது ஊருக்கு வருகிறார்கள் என்ற செய்தி அறிந்த, திருமறைக்காடு தலத்தில் இருந்த அடியவர்கள், மிகவும் மகிழ்ச்சி அடைந்து ஊரினை அலங்கரித்தனர். திருமங்கல பொருட்கள் பலவற்றையும் ஏந்தி எதிர் கொண்டு அழைத்து இருபெருமக்களையும் வரவேற்று மகிழ்ந்தனர்.

கோயிலின் வெளி வாயில் வழியாக உட்புகுந்த இருவரும், திருக்கோயிலை வலம் வந்து உள்வாயில் வந்து சேர்ந்தனர். உள்வாயில் அடைத்து இருப்பதை கண்ணுற்ற இருவரும் வாயிலை வணங்கி நின்றனர். திருக்கதவம் தாழிட்டு இருப்பதை கேட்டு அறிந்தனர்.

அதுசமயம், பண்டைய நாளில், வேதங்கள் சிவனாரை வழிபட்ட பின்னர், கோயில் வாயிற்கதவுகளை திருக்காப்பிட்டு மூடிவிட்டன.

அது நாள் முதலாக, அந்த கதவுகள் மூடியே இருப்பதாகவும் அருகே இருந்த அடியார் பெருமக்கள் கூறினார். மறைகள் ஓதும் பெருமையுடைய அன்பர்கள் பலர் முயன்றும், மூடிய கதவுகள் திறக்கப்படவில்லை என்று கூறிய அடியார்கள், தாங்கள் அனைவரும் திட்டிவாசல் எனப்படும் அருகிலிருந்த சிறிய வாயில் வழியாக திருக்கோயிலுக்குள் சென்று இறைவனை வழிபாட்டு வருவதாக கூறினார்கள். என்று பெரியபுராணத்தில் சேக்கிழார் பெருமான் பதிவு செய்கிறார்.

அருமறைகள் திருக்காப்பு செய்து வைத்த
அக்கதவம் திறந்திட அம்மறைகள் ஓதும்
பெருகிய அன்புடை அடியார் அணைந்து நீக்கப்
பெறாமையினால் அன்று முதலாகப்பின்னை
ஒரு புடை ஓர் வாயில் அமைத்து ஒழுகும் தன்மை
உள்ளபடி கேட்டருளி உயர்ந்த சண்பைத்
திரு மறையோர் தலைவர் வியப்பெய்தி நின்று
திருநாவுக்கரசருக்குச் செப்புகின்றார்

இதனைக் கேட்ட மனம் கலங்கியவர் இறைவனிடம் வேண்டுதல் வைத்து அடைக்கப்பட்டுள்ள திருக்கோயில் கதவுகளை திறக்கவும் அடியார் பெருமக்கள் நேர்வழியே சென்று இறைவனை தரிசித்து வழிபடவும் செய்ய வேண்டும் என கருதினர்.

ஞானசம்பந்த பெருமானின் திருக்குறிப்பை அறிந்து அப்பர் பிரான் செந்தமிழ் பாடல் பட விழைகிறார் என பெரியபுராணத்தில் சேக்கிழார் பெருமான் பதிவு செய்கிறார்

அப்பரே வேதவனத்து ஐயர் தம்மை
அபிமுகத் திருவாயில் திறந்து புக்கே
எப்பரிசும் நாம் இறைஞ்ச வேண்டும் நீரே
இவ்வாயில் திருக்காப்பு நீங்குமாறு
மெய்ப்பொருள் வண்டமிழ் பாடி அருளும்
என்ன விளங்கு மொழி வேந்தர்அதுமேற்கொண்டு என்னை
இப்பரிசு நீர் அருளிச் செய்தீரால் ஆகில்
இது செய்வேன் எனப் பதிகம் எடுத்தப் பாட

ஞானசம்பந்தர் பணித்த பின்னர், அப்பர் பெருமான் பாடிய பதிகம் தான் பண்ணின் நேர் மொழியாள் உமை பங்கரோ என்ற திருப்பதிகம். இந்த பதிகத்தில் வரும் சொற்கள் ஒவ்வொன்றும் வியந்து சிந்திக்க தக்கது, சில உதாரணமாக பார்க்கலாம்.

இந்த பதிகத்தின் முதல் எழுத்து “ப” வல்லினத்தில் தொடங்கும். ப என்று சொல்லிப்பாருங்கள். இதழ் இரண்டும் விரியும்.. கதவு திறக்க வேண்டும் என்ற குறிப்பை இதில் வைத்து பாடல் அமைந்ததாக உணர முடிகிறது.

வல்லின சொல்லை முதலில் வைத்து பாடுவதால், கதவை திறக்க வன்மை கொண்டு முயற்சி செய்ய வேண்டும் என்ற குறிப்பும் இதனால் விளங்கும். சுவாமி திருமுன் அடைக்கப்பட்ட திருக்கதவும் முன் நின்று தொலைவில் இருந்தவாராக காணப்பட்டார் என்ற பொருள் பட ஓகார விகுதி சேர்க்கப்பட்டு, மறைக்காடரோ, உமை பங்கரோ, என்ற பதிக பாடல்களில் வரும் குறிப்பு அதன் நேர்த்தி நம்மை வியக்காமல் இருக்க செய்வதில்லை.

பண்ணின் நேர் மொழியாள் உமை பங்கரோ
மண்ணினார் வலம் செய்ம் மறைக்காடரோ
கண்ணினால் உமைக் காண கதவினைத்
திண்ணமாகத் திறந்து அருள் செய்ம்மினே

பத்து பாடல்கள் பாடிய பின்னரும், கோயிலின் கதவுகள் திறக்கப் படாமையால், அப்பர் பிரான் மிகவும் மனம் வருந்தினார். கதவினைத் திறக்கச் செய்யும் மிகவும் அரிதான செய்கை என்று சேக்கிழார் பெரிய புராணத்தில் குறிப்பிடுகின்றார்.

கதவு திறக்கப்பட்ட பின்னர், அதனால் மகிழ்ந்த அடியார்கள் மற்றும் விண்ணோர்கள் எழுப்பிய ஆரவார ஒலி, அண்டங்கள் அனைத்தையும் எட்டின என்று இங்கே பதிவு செய்துள்ளமையால் அறிந்து கொள்ள முடிகிறது.

திருஞானசம்பந்தர் பதிகங்கள் திருக்கடைக்காப்பு என்றும், சுந்தரர் பதிகங்கள் திருப்பாட்டு என்றும் அப்பர் பெருமான் பதிகங்கள் தேவாரம் என அப்பர் பதிகங்களும் அழைக்கப் பெறும் என்பதை நாம் அறிவோம்.

ஆனால் இந்த பதிக பாடலை குறித்து சொல்லும் சேக்கிழார் பெருமான் இதனை கடைக்காப்பு என்று குறிப்பிடுகின்றார்.

பதிகத்தின் நோக்கம் இந்தப் பாடல் பாடிய பின்னர் நிறைவேறிய காரணத்தால், இந்தப் பாடலை கடைக்காப்பு என்று சேக்கிழார் பெருமான் சொல்லி இருக்கலாம் என்று எண்ண தோன்றுகிறது.

பாடிய அப்பதிகப் பாட்டான பத்தும்
பாடல் நிரம்பிய பின்னும் பைம்பொன் வாயில்
சேடுயர் பொன் கதவு திருக்காப்பு நீங்காச்
செய்கையினால் வாகீசர் சிந்தை நொந்து
நீடு திருக்கடைக்காப்பில் அரிது வேண்டி
நின்றேடுக்கத் திருக்காப்பு நீக்கம் காட்ட
ஆடிய சேவடியார் தம் அடியார் விண்ணோர்
ஆர்ப்பு எழுந்தது அகிலாண்டம் அனைத்தும் மூழ்க

பின்னர் அடியார்கள் புடை சூழ, அப்பர் பெருமானும், ஞான சம்பந்தரும் திருக்கோயில் உள்ளே சென்று, சிவபிரானை வணங்கிப் போற்றினார்கள். பெருமானின் சன்னதியில் இருவரும் பல பதிகங்கள் பாடியதாக பெரிய புராணத்தில் கூறப்பட்டுள்ளது. ஆனால் அத்தகைய

பதிகங்கள் ஏதும் நமக்கு கிடைக்கவில்லை. எப்போதும் மூடியே கிடந்த கோயில் கதவுகள் திறந்து, அனைவரும் அந்த வாயில் வழியாக கோயிலுக்குள் சென்ற திரும்பிய பின்னர், திறக்கப்பட்ட கதவுகள் எப்போதும் திறந்தே இராமல், கதவுகள் திறத்தலும் அடைத்தலுமாகிய செய்கை எப்போதும் நடைபெற வேண்டும் என்ற நோக்கத்துடன், அப்பர் பிரான், ஞான சம்பந்தரை நோக்கி, கதவுகள் மூடும்படி பதிகம் பாடி அருளவேண்டும் என்று வேண்டினார்.

அப்போது ஞானசம்பந்தர், சதுரம் மறை தான் என்று தொடங்கும் பதிகத்தை பாடத் தொடங்கினார். இந்தப் பதிகத்தின் முதல் பாடலை பாடி முடித்த பின்னர், இரண்டு பக்கத்திலும் திறந்து கிடந்த கதவுகள் மூடின.

இங்கே சிந்தனைக்கு வைக்கும் வினா என்ன என்றால், தாம் அரிதில் பாட பிள்ளையார் எளிதில் பாட என சற்று அயர்ந்தார் என குறிப்பிடுவது சரியா..? மோன நிலையில் இருப்பவருக்கு அப்படி ஒரு அயர்ச்சி வருமோ...? என்ற இந்த ஐயம் எழும்.. இதனை அறிவியல் கண் கொண்டு நோக்கினால், இதில் சொல்ல வரும் செய்திகள் விளங்கும்.

திருமறைக்காட்டில் திருக்கோயிலின் திருக்கதவம் வடமொழி வேதங்களினால் நீண்ட நெடுங்காலமாக திறக்கப்படாமல் இருந்தாது.. எத்தனை ஆண்டுகளாக திறக்கப்படாமல் இருந்தது என்பதனை அறிய முடியவில்லை.. இதனை சேக்கிழார் பெருமான் குறிப்பிடுகையில்,

> "உரக்கத்தவம் திருக்காப்புச்
> செய்த அந்நாள் முதல் இந்நாள் வரையும்
>
> பெரியபுராணம் 1530

ஆக, நீண்ட நெடும் நாட்களாக அடைத்து வைக்கபட்ட கதவு என்பது இதனால் தெளிவாகிறது.. இப்படி நீண்ட நெடும் காலமாக அடைத்து வைக்கப்பட்டு இருப்பதால், உள்ளிருக்கும் காற்று நிலை நிறுத்தப்பட்டு இருந்த படியால் தான் அப்பர் பெருமான் அயர்வுற்று இருந்தாரே அன்றி “தன் முனைப்போடு பாடத் தொடங்கி விட்டோமோ என்ற கருத்தில் அயர்வுற்று இருந்ததாக எண்ணுதல் முறை அல்ல.

“தேடித் தேடோன்னாத தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டு கொண்டேன். (4-9-93)

என பாடும் அவர் உள்ளத்தில் இறைவன் இருக்கையில் தன முனைப்பு வர சிறிதும் வாய்ப்பு இல்லை. என்பதனை அறிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

அப்படியானால் ஞான சம்பந்தப் பெருமானும் அப்பர் சுவாமிகளுடன் தானே இருந்தார். அவரும் தானே இதே கருத்தின் படி அயர்வுற்று இருக்க வேண்டும் என்று ஐயம் எழும்.

ஞான சம்பந்தப் பெருமானை விட அப்பர் சுவாமிகள் உடல் வயதில் மூத்தவர். மூடியிருக்கும் திருக்கதவு திறக்கும் போது, அடைத்து வைத்த காற்று மூர்ச்சை அடைய செய்தது. சம்பந்த பெருமான் உடல் வயதில் இளையவர் என்பதால் அந்த மூச்சுத் திணறலை தாங்கிக் கொள்ள இயன்றது என்றே சொல்லத் தோன்றுகிறது.

நீங்களே நீண்ட நாட்களாக அடைத்து வைக்கப்பட்ட ஒரு அறையில் நுழைந்து பாருங்கள்.. மூர்ச்சை அடைய செய்யும் ஒரு அழுத்த காற்று அங்கே படரும்..

தமக்கு அயர்ச்சியினை ஏற்படுத்தியது போல மற்ற அடியார்களுக்கும் ஏற்பட்டு விடக் கூடாது என்று எண்ணியே தான் காழி பெருந்தகையாரை திருக்கதவம் அடைக்க பாட வேண்டுகோள் வைக்கிறார்.

சரி..

கதவம் திறக்க பாடிய அப்பர் பெருமானே திருக்தவை அடைக்கவும் பாடி இருக்கலாம் தானே என்ற இன்னொரு சிந்தனை நமக்கு வராமல் இல்லை.. ஏன் அப்பர் திருக்கதவம் அடைக்க அப்பர் சுவாமிகள் பாடாமல் சம்பந்த பெருமானை பாட சொல்கிறார் என்றால்.. நீண்ட நாட்களாக அடைக்கபட்ட கதவு திறந்ததும் அதில் இருந்து வந்த மாசு காற்று அப்பரின் வயது முதிர்ச்சி காரணமாக அதை அவரின் உடல் எதிர்கொள்ள தயாராக இல்லை.. அதனால் திருக்கதவம் அடைக்கும்படி பாட சம்பந்த பெருமானிடம் வேண்டுகோள் வைக்கிறார்.

ஒரு தேவார பாடல் சம்பந்த பெருமான் பாடியவுடனே திருக்கதவம் அடைத்துக் கொண்டது. நாவுக்கரசரின் உள்ளக் கிடக்கையை தெரிந்து இறைவன் திருக்க்தவினை தாழிட திருவுளம் கொண்டு உள்ளார் என்பதும் நடந்த நிகழ்ச்சிகளின் மூலம் நமக்கு தெளிவாக தெரிகிறது.

ஆக, இந்த சிந்தனையில் வந்த அறிவியல் குறிப்பு என்ன என்றால்.. நீண்ட நாட்களாக அடைக்கப்பட்ட அறையில் புதிய காற்று நுழையும் போது, அது மாசு பட்டு மூர்ச்சை அடைய செய்யும்..

இதனால் தான் அப்பர் சுவாமிகள் மூர்ச்சை அடைந்தனரே தவிர, அறிவியல் கண் கொண்டு பார்க்க இன்னொரு சிந்தனை தெரியவில்லை.

இப்படி கதவை திறப்பதும்/ மூடுவதும்இறைவனின் திருவிளையாடல்.இதனால்அடியார் பெருமை காட்டப் படுகிறது என்றாலும்இந்த விளையாட்டில்சொல்லப்படுவதாக கருதுவது/ வடமொழியால் அடைபட்ட கதவத்தை/ தமிழால் திறக்கவும் முடியும்.. (சாவியில்லாமல் பூட்டும் பூட்டுக்கள் உண்டு. ஆனால்எந்தப் பூட்டுவானாலும்சாவி இல்லாமல் திறக்கவே முடியாது. அது போல/ திருவடிக்கு சாவி தமிழ் பாட்டு தான்என்பதனை குறிப்பதாகவே கொள்ள தோன்றுகிறது.

# குடல் அழற்சி நோய்

**தி**ருமுனைப் பாடி நாட்டின் திருவயமூரில் புகழனாருக்கும் மாத்தினியாருக்கும் இரண்டாவது மகவாக தோன்றியவர் திருநாவுக்கரசர். இளமை பருவத்தில் பெற்றோர் இவருக்கு இட்ட பெயர் மருள் நீக்கியார் என்பதாகும். இவரது தமக்கையார் பெயர் திலகவதியார்.

கலிப்பகையார் என்பவர் வீரத்தில் ஆண்சிங்கம், ஈரத்தில் கார்மேகம் என புகழத்தக்க படைத் தலைவர். சிவபெருமானிடத்து பக்தி பூண்ட அவருக்கு திலகவதியாரை திருமணம் செய்து வைப்பதற்கு முடிவு செய்தனர். மன்னார் ஆணைப்படி போருக்கு சென்ற கலிப்பகையார் போர்க்களத்தில் எதிர்பாராத விதமாக அவர் உயிர் விட நேர்ந்தது. அதே போரில் புகழனாறும் இறந்தார். கணவனை இழந்த மாத்தினியாரும் உயிர் விட்டனர்.

பெற்றோரை இழந்த திலகவதியார், மணக்க இருந்த கலிப்பகையாரையும் இழந்தார்; தன் தம்பி மருள்நீக்கியாருக்காக வாழந்து வரும் சூழலில், உலக நிலையாமையை உணர்ந்த மருள் நீக்கியார், உலக நிலையாமையை உணர்ந்தார். பின் பாடலிபுத்திரம் சென்றார். அங்கு சமானர்களின் பள்ளியில் சமண சமயமே வீட்டு நெறி என அதில் புகுந்தார். அச்சமய உண்மைகளை நன்கு காற்று வல்லவராய் விளங்கியதால் தரும சௌற் என்ற மேலான பட்டப் பெயரையும் பெற்று சமண சமய தலைவராக விளங்கினார்.

திலகவதியார் தம் தம்பி தாய் சமயமான சைவத்தை விட்டு விலகி சமண சமயத்தை சார்ந்து இருப்பதை எண்ணி

வருந்தி, சிவபெருமானிடம் தம் தம்பியை சமணத்தில் இருந்து மீட்டுத் தரும்படி வேண்டிக் கொண்டார்.

இறைவனின் வேண்டுதலுக்கு செவி சாய்த்த இறைவனார், தரும சேனருக்கு சூலை நோயை தந்தார். பெரிதும் வருத்தும் அந்நோயை சமானர்களால் போக்க இயலவில்லை. ஆதலால், நோயுற்ற நிலையை தம் தமக்கையாருக்கு சொல்லி வரும்படி வேண்டினார்; தாம் இருக்கும் இடத்திற்கு தம்பியை வரும்படி சொல்லி அனுப்பினார்.

தமக்கையாரின் கட்டளையை ஏற்று தருமசேனார் எனும் மருள் நீக்கியார் திலகவதியாரை கண்டு அடிகளில் விழுந்து வணங்கினார். அவர் திருநீற்றை தந்து திருவதிகை வீரட்டா கோயிலுக்கு அழைத்து சென்றார். அங்கே நம்பர் அருளினால், தம் நோய் நீங்கிட பதிகம் பாடினார். (கூற்றாயினவாறு விலக்க கலீர்), கொடிய சூலை நோய் அவரை விட்டு நீங்கியது. நீ அரிய பதிகம் பாடினாய் ஆதலால் நாவுக்கரசர் என்ற பெயர் நிலைக்கட்டும் என இறைவர் அருள் புரிந்தார். தொடர்ந்து மனம் வாக்கு காயத்தினால் தொண்டு செய்ய தொடங்கினார். இது அப்பர் வரலாற்றில் பதிவு செய்துள்ளது என்பதை அறிவோம்.

இறைவன் அருளால் சூலை நோய் ஏற்பட்டது என்றும் பின் அது நம்பர் அருளால் தீர்ந்து விலகியது என்றும் நாவுக்கரசர் வரலாற்றில் இருந்து நாம் அறிகிறோம். இப்போ சிந்தனைக்கு வருவதெல்லாம், இறைவன் அருளினால் தான் இது நிகழ்ந்தது என்றாலும் ஏன் சூலை நோய் கொடுத்து ஆட்கொள்ள வேண்டும். வேறு விதமாக ஆட்கொண்டு இருக்கலாம் தானே, ஏன் சூலை நோய் கொடுத்து ஆட்கொள்ள வேண்டும். ?

அப்பர் பெருமானை இறைவன் சூலை நோய் கொடுத்து ஆட்கொண்டது இறைவனின் திருக்கருணை என்பதில் ஐயம் இல்லை எனினும்.. ஒருவருக்கு(திருஞானசம்பந்தருக்கு) பாலை கொடுத்து ஆட்கொண்ட இறைவன் இன்னொருவருக்குக்(சுந்தரருக்கு) ஓலை கொடுத்து ஆட்கொண்ட இறைவன் நாவுக்கரசருக்கு மட்டும் ஏன் சூலை நோய் கொடுத்து ஆட்கொள்ள வேண்டும்..? இதில் என்ன அறிவியல் சிந்தனை இருக்கிறது..?

தட்டை இடுக்கித் தலையைப் பறித்துச் சமணே நின்று உண்ணும்
பிட்டர் சொல்லுக் கொள்ள வேண்டா; பேணித் தொழுமின்கள்!
வட்டமுலையாள் உமையாள் பங்கர் மன்னி உறை கோயில,
அட்டம் ஆளித்திரள் வந்து அணையும் அண்ணா மலையாரே.

(1:69:10)

திருஞானசம்பந்தர் இந்த திருப்பதிகத்தில் "நின்று உண்ணும் சமணர்கள்" என்ற குறிப்பை பதிவு செய்கிறார். இந்த குறிப்பின் படி பார்த்தால், ஒருவர் நின்று உண்பதையே கொண்டு இருப்பவர்கள் உணவு செரிமான பிரச்சனை ஏற்பட்டு மலச்சிக்கல் அது தொடர்ந்து குடல் அழற்சி நோய் ஏற்பட ஏதுவாக இருக்கும்.

மருத்துவ அறிவியலின் படி, Appendicitis என்னும் குடல் அழற்சிக்கான நோய் காரணமும் செரிமான கோளாறு, மலச்சிக்கல், அடிவயிறு வலித்து, வாந்தி குமட்டல், காய்ச்சல் இது தானே.

தர்மசேனராக அப்பர் பெருமான், சமணத்தை சார்ந்து இருக்கும் போது தான் இந்த சூலை நோய் ஏற்பட்டு இருக்கிறது. அந்த சமணத்தில் இருக்கும் போது, திருஞான சம்பந்தர் பதிகத்தில் உள்ள குறிப்பு படி, எப்போதும் நின்றபடி உணவு உண்பத்தை பழக்கத்தில்இருப்பதால், சூலை என்னும் குடல் அழற்சி நோய் ஏற்பட்டு இருக்கிறது. அதனால் இறைவனின் திருக்கருணையினால் இது நிகழ்ந்தது என்றாலும் அறிவியல் சிந்தனைக்கு ஏற்பவே,

இறைவனின் திருக்கருணை அமைத்து தந்து இருக்கிறது என்பதை புரிந்து கொள்ளும் போது, மெய்சிலிறக்காமல் இல்லை.

பாலை சம்பந்தருக்கும் நூலை மணிவாசகருக்கும், ஓலையை சுந்தரருக்கும் கொடுத்து ஆட்கொண்ட எம் பெருமான் ஏன் அப்பர் பெருமானுக்கு சூலை கொடுத்து ஆட்கொண்டார் என்ற காரணம் விளங்கி இருக்கும்.

# Tattoo..!!

டாட்டு என்பது இன்றைய நவீன காலத்தில் ஒரு நாகரீகமாக கொண்டாடப்படுகிறது. உடலில் விரும்பிய இடங்களில் விரும்பிய சின்னங்களை வரைந்து கொள்வது விருப்பமானவர்களின் பெயர்களை எழுதிக் கொள்வது போன்ற பலரது சிந்தனைகள் பல விதமாக இருப்பதை நாம் பார்த்து இருப்போம்.

பச்சை குத்தல்கள் என சொல்லப்படும் இந்த நவீன கால டாட்டூ பண்டைய சடங்குகள் முதல் நவீன சுய வெளிப்பாடு வரை, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மனித தோலை அலங்கரித்து, கதைகளைச் சொல்லி, சொந்தமாக இருப்பதைக் குறிக்கின்றன.

ஒரு காலத்தில் ஆன்மீக பக்தியின் அடையாளமாக இருந்த ஒன்று தான் இந்த நவீன கால டாட்டூ , உலகம் முழுவதும் மில்லியன் கணக்கான மக்களைக் கவர்ந்து, பன்முகத்தன்மை கொண்ட மற்றும் எப்போதும் வளர்ந்து வரும் கலை வடிவமாக பரிணமித்துள்ளது.

புதிய கற்காலக் காலத்திலேயே பச்சை குத்துதல் இருந்ததாக சான்றுகள் தெரிவிக்கின்றன, கிமு 3300 ஆம் ஆண்டைச் சேர்ந்த மம்மி செய்யப்பட்ட மனிதரான ஓட்ஸி தி ஐஸ்மேன் ஏராளமான சிகிச்சை பச்சை குத்தல்களை வைத்திருந்தார். இதே போல எகிப்தியர்கள் மத மற்றும் சமூக நோக்கங்களுக்காகவும், அதே நேரத்தில் பாலினேசியர்கள் தங்கள் பரம்பரை, அந்தஸ்து மற்றும் சாதனைகளைப் பிரதிபலிக்கும் விதமாகவும், ஜப்பானில், கலாச்சார முக்கியத்துவத்துடனும் இருந்ததை நாம் தெரிந்து இருக்கலாம்.

இது 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் மட்டுமே பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்ட நடைமுறையாக மீண்டும் வெளிவரத் தொடங்கியது, ஆனால் இது தேவார முதலிகள் காலத்தில் இருந்ததாக திருமுறை செய்திகளில் நாம் காண முடிகிறது. அப்பர் சுவாமிகளின் வரலாற்றில் இந்த செய்திகளை சிந்திக்க எடுத்துக் கொள்வோம்.

சைவ சமயத்தில் பிறந்த நாவுக்கரசர், விதி வசத்தால், சமணத்தை சார்ந்து இருந்த போதும் இறைவன் திருக்கருணையினால், மீண்டும் சைவத்தை சார்ந்து சிவ தொண்டுகள் பல புரிந்து வந்தார். சமண கொள்கைகளை அழிக்க விடம் உண்ட போதும், உடலை தூய்மையாக்க கல்லில் கட்டி கடலில் இட்ட போதும், நீற்றறையில் ஒரெழு நாள் இருந்த போதும், தான் தூய்மை பெற வேண்டும் என உள்ளம் நெகிழுந்து விரும்பினார்.

ஒரு சமயம், திருப்பெண்ணாகடத்துத் தூங்கானைமாடம் என்னும் திருக்கோயிலில் உள்ளபெருமானைப்பணிந்து சமண் சமயத்தொடக்குண்ட உடல் தூய்மைபெற இடபக்குறி சூலக்குறி பொறித்தருள வேண்டினார்.

"பொன்னார் திருவடிக்கு ஒரு விண்ணப்பம் "

என்று தொடங்கித் திருவடிக்கு விண்ணப்பமும் தெரிவித்தார். இறைவன் திருவருளால் சிவபூதம் ஒன்று வந்து திருநாவுக்கரசர் தோள்களில் இடபக்குறி சூலக்குறி பொறித்தது.

திருநாவுக்கரசர் சிவபிரான் திருவருளை வியந்து மகிழ்ந்து உய்ந்தேன் என்று பணிந்தார். சிலநாள் தங்கி உழவாரப்பணி செய்து சுடர்க் கொழுந்தீசனைப் பாடிப் பரவினார்.பிறகு, திருநாவுக்கரசர் திருவரத்துறை, திருமுதுகுன்றம் முதலான தலங்களைத் தரிசித்து நிவாநதியின் கரைவழியாகக் கடந்து தில்லையம்பதியை

அடைந்தார்என்ற குறிப்புகளை அப்பர் வரலாற்றில் இருந்து நாம் காணலாம்.

இங்கே நாம் சிந்திக்க எடுத்துக் கொள்ளும் செய்தி, இந்த இடப குறி பொறித்தல் தான். இந்த இடப குறி பொறித்தல் என்பது தான் இன்றைய நவீன உலகில் சொல்லும் அந்த டாட்டூ . இந்த டாட்டுவை தொடக்கி வைத்தவர் அப்பர் பெருமான் என்று சொன்னால் ஆச்சரியமாக இருக்கிறது அல்லவா.?

பொன்னார் திருவடிக்கு ஒன்று உண்டு விண்ணப்பம் என் ஆவி காப்பதற்கு இச்சை உண்டேல் இருங் கூற்று அகல மின்னாரு மூவிலைச் சூலம் என் மேல் பொறி மேவுகொண்டல் துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே

அப்பர் தேவாரத்தில் வரும் இந்த பதிகமே இதற்கு அகச் சான்றாக அமைந்து உள்ளது. இதை decode செய்து பார்த்தால்

“I have just one request at your golden feet - If you wish to protect my soul and drive away the great death (Yama)...,then please inscribe your trident (shining three-pointed Trishul) upon my body as a mark (and this is tattoo)

இது ஏன் வரலாற்று ரீதியாகவும் ஆன்மீக ரீதியாகவும் முக்கியத்துவம் வாய்ந்ததுஎன்றால், வரலாற்றில் குறிப்பிட்டு உள்ளாதற்கு முன்னதாகவே, பச்சை குத்துதல் பற்றிய ஆரம்பகால வேதக் குறிப்புகளை இந்த அப்பரின் திருமுறை வரிகள் நம்மை மெய் சிலிர்க்க வைக்கிறது.

இன்றைய நவீன உலகில் டாட்டூ என சொல்லப்படும் இந்த பச்சை குத்தலுக்கான முதல் பதிவு செய்யப்பட்ட ஆன்மீக கோரிக்கைகளில் ஒன்றாகக் இதனைக் கருதலாம். உடல் கலையாக அல்ல, மாறாக ஆன்மா பாதுகாப்பு

மற்றும் தெய்வீகத்துடன் அடையாளம் காணுதல்என்பதாக. சிவனின் திரிசூலம் நிரந்தரமாகக் குறிக்கப்பட வேண்டும் என்பதே அப்பர் சுவாமிகளின் கோரிக்கை. இது சரணாகதி மற்றும் சேவையின் புனித முத்திரை.

சமகால இணைப்பாக புனிதமான உடல் அடையாளங்களுக்கான வரலாற்று அடித்தளமாக இதை முன்வைக்கலாம். பச்சை குத்தல்கள் மூலம் தங்கள் நம்பிக்கைகளை வெளிப்படுத்தும் இன்றைய இளைஞர்களுக்கு இது ஒரு சக்திவாய்ந்த செய்தியாக இது அமையும்.

# கொரியர் சர்வீஸ்

நமக்கு தேவையான ஒரு பொருளை ஒரு இடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்கு எடுத்துச் செல்ல இப்போது பார்சல் சர்வீஸ் அல்லது கொரியர் சர்வீஸ் இருக்கிறது என்பதுநமக்கு தெரியும். எந்த நாட்டில் இருந்தும் எந்த பொருட்களையும், ஓர்இடத்தில் இருந்து இன்னொரு இடத்திற்கு சுலபமாக கொண்டு செல்ல முடிகிறது. ஆனால் இந்த சேவை எப்போது தொடங்கப்பட்டது என்று தெரியுமா? என்று கேட்டால் பலருக்கும் அது பற்றிய சிந்தனையே இருக்காது. முந்தைய காலத்தில் மாட்டு வண்டி என்பது போல சொல்லி விட்டு சிலர் நிறுத்தி விடுவார்கள். இப்படி ஒரு பொருளை எடுத்துச் செல்ல முடியும் (logistics) என்ற அடிப்படை சிந்தனையை திருமுறையில் இருந்து மேற்கோள் காட்டினால் வியப்பாக இருக்கும் இல்லையா?

சுந்தரர் பெருமான், பல திருத்தலங்களை தரிசனம் செய்த பிறகு, திருநாவலூர் பரவையாருடன் கூடி ஆரூரப் பெருமானை வழிபாட்டுத் திருவாரூரில் தங்கியிருந்தார். குண்டையூர் என்ற ஊரில் வேளாள மரபைசேர்ந்த குண்டையூர்க் கிழார்வாழ்ந்து வந்தார். இவர் சுந்தரநாயனார் மீது அதிகமான அன்பு கொண்டவர்.சுந்தரர் தம் குடும்பத்திற்கு வேண்டிய உணவுப் பொருள்களைக் குண்டையூர் கிழவர் அனுப்பி வந்தார். இப்பணி இடையறாது நிகழ்ந்த து வருங்கால உரிய காலத்தில் மழை பொய்யாமையால் நாட்டில் பஞ்சம் உண்டாயிற்று.

சுந்தரர் பெருமான் மாளிகைக்கு இன்று நெல் அனுப்புதற்கு இல்லையே எனப் பெறும் கவலை கொண்ட குண்டடையூர் கிழவர் அன்றும் உணவேதும் கொள்ளாமல் அயர்ந்து

துயில் கொண்டார். சிவபெருமான் அவர் கனவில் தோன்றி, நம்பி ஆரூரன் பொருட்டு உன்பால் நெல்லைத் தந்தோம். என்று உரைத்துக் குபேரனை ஏவினான். குபேரன் குண்டையூர் முழுவதும் நெல் மாலையாக குவிந்திட செய்தான். வைகறையில் எழுந்த கிழவர் மலை போலும் நெறி குவியலைக் கண்டு வியப்புற்று இறை அருளை நினைந்து போற்றினார். திருவாரூர் சென்று வன்தொண்டரான சுந்தரரிடம் நிகழ்ந்ததை க் கூறுதற்குச் சென்ற குண்டையூர் கிழவர் வழியிலேயே
வன்தொண்டரைக் கண்டு அவரை இறைஞ்சித் தம் ஊருக்கு அழைத்துச் சென்றார். குண்டையூரில் உள்ள நெல் மலையை தந்து அருளிய சிவபெருமானே, இதனைத் திருவாரூருக்கு எடுத்துச் செல்வதற்குரிய ஆட்களையும் தந்தால்தான், இதனைக் கொண்டு செல்ல முடியும் என நினைந்து அண்மையில் உள்ள திருக் கோளிலித் திருக் கோயிலை அடைந்தார். இறைவன் திருமுன் நின்று,

நீள நினைந்து அடியேன் உமை நித்தலும் கை தொழுவேன்;
வாள் அன கண் மடவாள் அவள் வாடி வருந்தாமே,
கோளிலி எம்பெருமான்! குண்டையூர்ச் சில நெல்லுப் பெற்றேன்;
“ஆள் இலை”; எம்பெருமான், அவை அட்டித்தரப் பணியே!

7:20:01

எனவரும் திருப்பதிகத்தைப் பாடி போற்றினார்.

அப்போது, இன்று பகற்பொழுது நீங்கிய பின் நம்முடைய பூத கணங்கள், நெல்லைக் கொண்டு வந்து திருவாரூர் முழுவதிலும் குவித்து விடும் என்று ஓர் அசரீரி எழுந்தது அது கேட்டு மகிழ்ந்த சுந்தரர் திருவாரூர் சென்று நிகழ்ந்தனவற்றை பரவையார்க்குத் தெரிவித்து மகிழ்ந்து இருந்தார். அன்று இரவே திருவாரூர் வீதிகளில் நெற் குவியல்கள் நிரம்பி விட்டன. மறுநாள் வைகறை பொழுதில் நேர குவியல்களைக் கண்டு வியப்புற்றார் பரவையார்; அவரவர்

மனை முகப்பில் உள்ள நெல் குவியலை அவரே வாரிக் கொள்ளலாம் என்று பறை அறைய செய்தார்.

இந்த வாலாற்று செய்தியில் இருந்து நாம் தெரிந்து கொள்வது யாதெனின், இவை நடந்தது எல்லாம் இறைவன் திருக்கருணையினால் தான் என்றாலும், இறைவன் தொடக்கத்திலேயே சுந்தரர் பெருமானுக்கு அனுப்ப வேண்டிய நெல் மணிகளை குண்டையூர் கிழார் தந்தது என திருவாரூருக்கு தந்து இருக்கலாம். ஆனால் அப்படி தராமல், முதலில் குண்டையூர் அனுப்பி பிறகு திருவாரூர் அனுப்புவது ஏன்?

குண்டையூர் கிழார் பெருமையை காட்டுவதற்கு தான் என்றாலும், குண்டையூர் கிழார் தந்தது என சுந்தரருக்கு சொல்லி இருக்கலாம் தானே. சரி போகட்டும். ஒரு கண பொழுதில் நெல் மணிகளை குண்டையூறுக்கு தந்த சிவபெருமான், இன்னொரு கண பொழுதில் திருவாரூருக்கு அனுப்பாமல் பகல் பொழுது நீங்கிய பின், ஒரு இரவில், குண்டையூரில் இருந்து திருவாரூர் அனுப்புவது என்பது கால இடைவெளியை காட்டுவதற்கு தான் (logistics planning).

பகற்பொழுது கழிந்ததற்பின் பரவை-மனை அளவு அன்றி,
மிகப் பெருகு நெல், உலகில் விளங்கிய ஆரூர் நிறைய ...

பெரியபுராணம்:3175

நாகப்பட்டினம் மாவட்டத்தில் உள்ள குண்டையூரில் இருந்து சுமார் 25 கிலோமீட்டர் தூரத்தில் உள்ள திருவாரூர் செல்வதற்கு ஆகும் நேரத்தை கணக்கிட்டு பார்த்தால் இந்த போக்குவரத்து logistics planning பற்றிய செய்திகள் நமக்கு விளங்க வரும். எல்லாம் இறைவன் திருக்கருணை என்றால் ஒரு நொடியில் செய்து இருக்கலாம் என்றாலும் இதை விளக்கி சொல்ல வந்தது தான் இந்த செய்தி. இதை இப்படி decode செய்து பார்த்தால், பண்டைய காலத்திலே எப்படி திட்டமிட்டு செயல்படுத்தப்பட்டு இருந்தது என்பதை தெளிவாக நாம் புரிந்து கொள்ள முடியும்.

# புதிய காசும்..பழைய காசும்...

அக்காலத்தில், மழை இன்மையால், பஞ்சம் உண்டாயிற்று. உயிர்கள் எல்லாம் பசியால் வருத்தம் உற்றன. சிவனடியார்களையும் பசி நோய் வருத்தியது. அது கண்டு அப்பரும் , சம்பந்தரும், சிவனடியார்களைச் சிந்தித்து இரவில் துயில் கொண்டனர்.

வீழிமிழலை இறைவன் அவ் இருவருக்கும் கனவில் தோன்றி, உங்களை வழிபடும் அடியார்களாது வருத்தத்தை நீக்குகம் பொருட்டு இப்பஞ்சம் நீங்கும் வரை நாம் நாள் தொறும் இத் திருக்கோயிலின் கிழக்கு பீடத்திலும், மேற்கு பீடத்திலும் ஒவ்வொரு காசு உமக்குத் தருகிறோம். பஞ்சம் நீங்கியபின் அக்காசும் தவிரவதாகும் என்று சொல்லி மறைந்து அருளினார்.

இருவரும் அன்று காலை திருக்கோயிலில் புகுந்த போது கிழக்குப் பீடத்தில் காசு இருத்தலைக் கண்டு சம்பந்தப் பெருமான் திருவருளைத் தொழுது அதனை எடுத்து, சிவனடியார் அனைவரும் வந்து உண்பார்களாக என்று இறு காலங்களிலும் பறை சாற்றி தெரிவித்து, தமது திருமடத்தல், வரும் அடியார் அனைவருக்கும் நாள் தோறும் திருவமுது அளித்தார்.

திருநாவுக்கரசு பெருமானும் மேற்குப் பீடத்தில் வைக்கப்பட்டு இருந்த காசை எடுத்து அவ்வாறே சிவனடியார்க்கு நாள்தொறும் திருவமுது அளித்து வந்தார்.

திருநாவுக்கரசரது திருமடத்தில் உள்ள அடியார்கள் காலம் பெற அமுது செய்தனர். திருஞான சம்பந்தர் திரு மடத்தில், உள்ள அடியார்கள் அமுது செய்வதற்கு காலம் தாழ்ந்தது. அதை உணர்ந்த சம்பந்தப் பெருமான் மடத்தில் உள்ள அடியார்களிடம் காரணம் கேட்டார். அதற்கு அவர்கள் சம்பந்த பெருமானை பணிந்து தாங்கள் பெறும் படிக்காசை பெற்றுக் பண்டம் வாங்க சென்றால் அதற்கு வட்டம் கேட்கிறார்கள். திருநாவுக்கரசர் பெற்ற காசை வட்டமின்றி பெற்றுக் கொள் கிறார்கள். இதுவே காலம் தாழ்த்து வதரக்குக் காரணம் எனக் கூறினர்.

அதனைக் கேட்டு, இனி வரும் காலத்தில் தரும் காசு வாசி தீரும்படி பெறுவோம் என்று திரு உளம் கொண்டு மறு நாள் காலையில் இறைவனைப் பணிந்து,

வாசி தீரவே காசு நலகுவீர்;
மசின் மிழையீர் ஏசல் இல்லையே.

என்னும் திருப்பதிகம் பாடி வாசி இல்லாத நல்ல காசினை சம்பந்தப் பெருமான் பெற்றார். அதனைப் பெற்ற அடியார்கள் காலத்தே பணம் பெற்று உரிய காலத்தில் திருவமுது செய்தார்கள். சில நாட்களில் எங்கும் மழை பெய்து பஞ்சம் நீங்கியது.

இதில் நாம் சிந்திக்க வைத்துக் கொள்ளும் செய்திகளும் ஐயங்களும் என்ன என பார்க்கலாம்.

சம்பந்தர் மடம் இருக்கும் கிழக்கு பீடத்தில் வைத்த காசு வாசி உடைய காசு என்றும் அப்பர் சுவாமிகள் இருக்கும்

மேற்கு பீடத்தில் உள்ள காசும் இருக்க என்ன காரணமாக இருக்கும்? இது இறைவன் திருக்கருணை தான் என்றாலும் சிந்திக்க இதனை இப்படி எடுத்துக் கொள்வோம்.

இதில் ஒரு காசு வாசியுடையதும் இன்னொன்று வாசி இல்லாததும் இல்லை என்பதை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். பிறகு ஏன் வாசியுடைய காசு என்று கடைகளில் சொல்கிறார் என்று கேட்க தோன்றுகிறதா?

திருஞான சம்பந்த பெருமான், தம்மிடம் பால் குடித்த வளர்ந்த பிள்ளை, அது தம் பிள்ளை என்பதால் புதிதாக தரப்பட்ட காசினை சம்பந்த பெருமானுக்கு தந்து அருள்கிறார் எம்பெருமான். அப்பர் பெருமானுக்கு வழக்கத்தில் உள்ள பழைய காசினை பஞ்சம் தீர்க்க தந்து அருள்கிறார். சந்தைக்கு புதிதாக உள்ள காசு என்பதால், அதன் மதிப்பு தன்மையை சரி பார்க்க சந்தையில் வட்டம் கேட்கிறார்கள் (authenticity) என சம்பந்தர் மடத்தில் இருந்த அடியார் பெருமக்கள் சொல்கிறார்கள்.

புதிதாக ஒரு காசு வரும் போது, அது செல்லத் தக்கது தானா? என்ற ஐயம் எல்லோருக்கும் வரும் இன்றைய நாளில் கூட புதிதாக வந்த பத்து ரூபாய் நாணயத்தை வாங்க பலர் முதலில் தயங்கினார். பேருந்துகளில் தவிர வேறு இடங்களில் இந்த பத்து ரூபாய் நாணயத்தை மாற்றுவது சிரமமாகவே இருந்தது. ஆக புதிய நாணயம் என்பதால் சந்தையில் வட்டம் கேட்கிறார்கள் அதனால் மடத்தில் உணவிட காலம் தாமதமானது.

அது தான் சிந்தனை என்றால், இறைவன் இருவருக்குமே புதிய காசு அல்லது அப்பர் பெருமானுக்கு புதிய காசு கொடுத்து இருக்கலாமே என்று சிந்திக்க தோன்றலாம். தன் வீட்டு பிள்ளை என்றால் அதற்கு தனி சிறப்பு உண்டு. அதற்கு தான் புதிதாக உள்ள எதுவும் முதலில் கிடைக்கும் இல்லையா. அதனால் புதிதாக உள்ள காசை சம்பந்தப் பெருமானுக்கும், பழக்கத்தில் உள்ள காசை அப்பர் பெருமானுக்கும் கிடைக்கும் படி இறைவன் அருளிச் செய்துள்ளார்.

சம்பந்தப் பெருமான் குழந்தை பருவத்தில் உள்ளவர் என்பதால், இறைவனை வேண்டி வாசி தீர காசு பெற்று, பஞ்சம் தீர்க்க, திருவமுது படைத்தார் என்பதை புரிந்து கொள்ளலாம். அதனால் இறைவன் சோதிக்க அல்லது அருள் செய்யவில்லை என்று, சிந்திப்பது சரியாக இருக்காது என்பதால், இந்த புதிய சிந்தனையை உங்களுடன் பகிர்ந்து கொண்டோம்.

,

# Reels and Shorts

இன்றைய நாளில் ஒருவர் தினமும் ஒரு முறையாவது whaats app, insta, face book, youtube என சொல்லாமல் இருக்கிறாரா என்றால், அநேகமாக இல்லை என்று தான் பதில் இருக்கும். ஆறாவது விரல் தான் ஸ்மார்ட் போன் என்ற நிலை வந்த பிறகு இதை எல்லாம் தெரிந்து கொள்ளாமல் இருக்க முடிவது என்பது சாத்தியமற்றது.

இதில் பலரையும் கவர்ந்தது மற்றும் பிரபலமானது Reels மற்றும் Shorts தான். 2017 ஆம் ஆண்டு தொடக்கத்தில் tik-tok மக்களை கவர்ந்தது போலவே மக்கள் மத்தியில் பிரபலமாக இருப்பது Instagram reels தான் Kevin Systrom and Mike Krieger என்பவர் தான் insta வில் தொடங்கி வைத்தார் என்பதெல்லாம் நமக்கு தெரிந்து இருக்கலாம். முதலில் insta வில் வெளியிடப்பட்டது 2020 ஆம் ஆண்டு தான்.

இந்த reels மற்றும் shorts இவைகளின் சிறப்பே என்ன என்றால் சுருங்கச் சொல்லி, விளங்க வைத்தல் தான் இதில் ஒரு reels சின் கால அளவு 15 வினாடிகள் தான் ஒரு shorts இன் கால அளவு 60 வினாடி அல்லது ஒரு நிமிடம். இந்த shorts வீடியோ 2020ம் ஆண்டு youtubeல் அறிமுகப்படுத்தப்பது.

அதெல்லாம் இருக்கட்டும் இந்த reels மற்றும் shorts இவை எல்லாம் இன்றைய நடைமுறை வாழ்க்கையில் வந்த மாற்றமா என்றால் இல்லை என்றே சொல்ல வேண்டும். இந்த வகையில் முதன் முதலில் reels வடிவில் செய்திகளை சொல்லி நம்மை எல்லாம்

வியக்க வைத்தவர் யார் என்று சிந்தித்துப் பார்த்தால் நமக்கே வியப்பாக இருக்கும். ஆம்..!! அது அவ்வையார் தான்.

"அறம் செய விரும்பு"
"ஆறுவது சினம் "

என்று ஒரு சின்ன punchல் reels வடிவில் பாடங்களை சொல்லி நமக்கு படிப்பினையை தந்தவர் அவ்வையார் தான். இன்றைய நாளில் reels என்ற பெயரில் அழைக்கும் இவைகளை அப்போது இந்த பெயர் கொண்டு அழைத்து இருக்க வாய்ப்பு இல்லை என்றாலும் பெரிய செய்திகளை சுருங்கச் சொல்லி மனதில் பதிய வைக்கும், இந்த கலை reels கலாசச்சாரம் நமது பண்டைய தமிழர்களின் சிந்தனை என்றால் நமக்கு வியப்பாக இருக்கிறது அல்லவா..? ஆத்திச்சூடியில் உள்ள ஒரு வரியை reels ஆக போட்டால் 15 வினாடிகள் கூட வராது என்றாலும் எவ்வளவு பெரிய பாடங்களை எத்தனை சுருக்கமாக சொல்லி தந்து இருக்கிறார்கள் என்று எண்ணிப் பார்க்க வியப்பாகவே இருக்கிறது அல்லவா!

Reels வடிவ சிந்தனைகளை தந்தவர் ஔவையார் என்றால், 60 வினாடிகள் ஓட கூடிய இந்த shorts என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. அவைகள் தான் திருக்குறள். இந்த திருக்குறள் திருவள்ளுவர் அருளியது என்பது நமக்கு தெரிந்து இருந்தாலும், ஔவைக் குறள் என ஔவையாரும் திருக்குறள் அருளிச் செய்து இருக்கிறார்கள்.

ஆக இன்றைய நவீன முறையில் உள்ள தொழில் நுட்ப மாற்றங்கள் தான் மாறுபட்டு இருக்கிறதே தவிர, இதரக்கான சிந்தனை பண்டைய தமிழர்களின் எண்ணத்தில் இருந்து வந்தவையை என்று எண்ணிப் பார்க்கும் போது , முன் தோன்றி மூத்த குடி தமிழக் குடி என்று நாம் பெருமை கொள்ள வேண்டும்.

அடுத்த முறை reels அல்லது shorts போடும் போது, ஒரு வினாடி, நமக்கு முன்னோடியாக இருந்த ஔவையாரையும்

திருவள்ளுவரையும் நாம் நினைத்துப் பார்த்து நன்றி சொல்ல நாம் கடமைப்பட்டு இருக்கிறோம். சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் இந்த பாடங்களை நாம் படித்து அதன் வழி நடக்க முயற்சி செய்வோம். வாழ்வில் வளம் பெறுவோம்.

# ஆசிரியர் குறிப்பு

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், தோன்றியவர்.

வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். “சித்தாந்த ரத்னா”, “திருவருட் செல்வர்”, “கைரேகை கலைஞன்” போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.



இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிடபுத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னைசுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்பநற்பணிமன்றம்போன்றபலஇடங்களில்பல்வேறுதலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெய்யில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

